வாலவாய்ச், சொக்கன்", "தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச், சொக்கனே." (திருநா. தேவாரம்.)

(டுகு - உசு.) "வேதியன் படைக்க மாலவன் காக்கப், பெருந்தோர் திருவுருத் தான்பெரிது நிறுத்தி,யமுதயில் வாழ்க்கைத் தேவர்கோ னிழிச்சிய, மதமலை யிருநான்கு பிடர்சுமந் தோங்கிச், செம்பொன்மணி குயிற்றிய சிகரக் கோயிலு, ளமையாத் தண்ணளி யுமையுட னிறைந்த, வாலவா யுறை தரு மூல காரணன்." கல். ௩உ.)

உஅ. திறலுடையவனைக் கொன்ற பாவம் - வீரகத்தி; உ: "மேதகு வீர மிக்க விருத்திரா சுரனைக் கொன்ற, வோதரும் பழியால்." காணார் - விளங்க அறியார்.

உகூ. ஆரா - தணியாத.

உகூ-௩௦. "காருடற் பிறையெயிற் றரக்கனைக் கொன்று, வச்சிரத் தடக்கை வரைப்பகை சுமந்த, பழவுடற் காட்டுந் தீராப் பெரும்பழி, பனிமலை படர்ந்த மாதுடன் றீர்த்தருள், பெம்மான்." (கல். க.)

௩க. வாரம் - கிழமை.

௩உ. (திருவிளை. தீர்த்த. கக.)

௩௩. சித்திரைச் சித்திரைத்தினத்து - சித்திரைமாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில். ஒப்பிலழகன் - சுந்தரேசர்.

௩௪. திறைவு - மகிழ்ச்சி; (உ) உ.

உ - ம் திருவிளையாடல்.

க. இபங்கள் - யானைகள்.

உ. கொளுவுதல் - பொருந்துதல். முன்னைத்தவம்.

௩. தும்பை இபக் கடவுளே-தும்பைமலர்போன்ற வெண்மை நிறம் பொருந்திய தெய்வயானையே. கோ - அரசன்; இந்திரன். புத்தியினிமை - மனமகிழ்ச்சி. கந்தம் - கழுத்து.

௪. இயம்பக் கேட்டருளாய். உபகாரம் - கையுறை; காணிக்கை.

௫. சுந்தரவடிவ, விளி; (௫) ௩.

௬. தேரூன்றி நின்ற மத்தகம்.

௭. வாங்கித் தகைத்தேன்.

௮. பூழியன் - பாண்டியன். வளை. ஒருவகை ஆயுதம். தேவர் கோன், விளி. எற்றுண் - அடிக்கப்படுவோய். (கடம்ப. இலீலா. உ.)

௧௦. அவமதியினுற் காட்டு யானையாகி உழல்வாயாக.

௧௨. பிறிது சாபம் - சாபத்தின் பரிகாரம்; ௧௩; இது, 'மறுசாபம்' எனவும் வழங்கும்; (௫அ) அ: "மறு பெருஞ்சாபமுங் கொடுத்தான்."

௧௩. அருந்தவன்-சிவபெருமான்; "தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே." (புறநா. ௧௰.) தரம் - தகுதி.

௧௪. உதரநெருப்பு - வயிற்றுத்தீ; ஜாடராக்கினி.

௧௭ பழுது - சாபம்.

௩ - ம் திருவிளையாடல்.

௪. மலயத்துவசன் - பொதியின் மலையின் உருவமெழுதிய கொடியையுடையவன்; (௪) க. இப்பாண்டியன் அகத்தியமுனிவர் அருளாற்பிறந்தவனுதலின், அவருக்கு இருப்பிடமாகவுள்ளதும் தவசம்போலே உயர்ந்து தோன்றுவதுமாகிய பொதியின் மலையின் சம்பந்தமான பெயர் இவனுக்கு இட்டனரென்று அஷ்டமிப் பிரதக்ஷிணமான்மியம் தெரிவிக்கின்றது.

உ. எலம் - மயிர்ச்சாந்து. குழற்கா - கூந்தலாகியசோலை. பரிந்தான் - அன்புற்றான்.

௩. ஆதிமரபு, மரபின்பெயர்; சூரியவம்சமென்று கருதுதற்கும் இடமுண்டு. வழுவமங்கையென்பது அப்பெண்ணின்பெயர்; (கக) ௩.

௪. முற்றுதல் - வளர்தல்.

௫. ஆல், ஒடு.

௭. இணையிலான் - சிவபெருமான். ஏதம் - துன்பம். ஆளும் - ஆளுவாள்.

௮. மிகை - அதிகம்.

௯. அவர் இயைந்து. தொல்லைத் தந்திரம் - பழமையாகியநூல்; வேதாகமங்கள்.

௧௦. வானித்தலம் - பூமி,

கஉ. முகுத்தம் - முகூர்த்தம். அன்றினர் - விரோதித்தவர்கள்; அன்றினர் சிங்கம் - மலயத்துவசன். முடி - தலை, கிரீடம்.

## ச - ம் திருவிளையாடல்.

க. மலைக்கொடிமன்னன் - மலயத்துவச பாண்டியன்; "எருதோடு கலையோடு சிலையோடு மலையோட விபமோட நேர், விருதோடு பொருதேறு புலிநேமி கிரிசூழ விளையாடவே" என்னும் தக்கயாகபரணியும், 'பருவதத்தைக் கொடிக்கணெழுதும் பாண்டியன் குலபதி இலாஞ்சனையும்' என்னும் அதன் உரைப்பகுதியும் இங்கே அறியர்பாலன.

ங. வெந்கிட - புறங்கொடுக்க; வெரிந், விகாரம். திசைவிசயம் - திக்குவிசயம்.

ரு. மதுரைமன்னன் - சோமசுந்தரக்கடவுள்; (சு) எ. தாள் வரை - மலையின் அடி; 'பாதசயிலம்' என்பர்வடநூலார். மதுரைமன்னன் இருந்தான்.

சு. கொம்மை - வட்டம்.

எ. துற்று - நெருங்கி. மிண்டுகள் - தருக்காற் சொல்லும் சொற்கள். சண்டவெங்கோபம் - மிக்க கோபம்.

அ. ஞாட்பு - போர்க்களம்.

கூ. கண்டது இல் - பார்த்ததில்லை.

க0. அஞ்சல் - அஞ்சற்க.

கக. வரை வில் - மலையாகிய வில். புரிகுழல், எழுவாய்.

கஉ. இருமை-பெருமை; (திருநக. கசு.)மந்திரி, எழுவாய்; அவன்சொல்லியதை, (ங) அ - ம் செய்யுளாலுணர்க.

கங. முறுவல்செய்தவர், சிவபெருமான்.

கச. முகுளம் - அரும்பு

கஎ. பயந்தவட்கு - தாய்க்கு.

கஅ. சுபகாலங்களிற் பூரணகும்பத்தின்மீது கமுகம் பாளைகளைச் செருகிவைத்தல் மரபு; "கீழ்பாற் றிசையின் மிசைவைத்த, வெள்ளிக்கும்பத்திளங்கமுகின் பாளை போன்று விரிந்தளதால்." (கம்ப.பால.மிதிலை.எஉ.)

உக. ஆலவட்டம் - விசிறி. இரட்ட - மாறியசைய.

உஉ. குணலை - இருவகைக்கூத்து அது, பல்வரிக்கூத்தைச் சார்ந்தது. சொன்னநாள், பங்குனி உத்தரம்.

உங. துகிலும் குழையும் இலங்க. வாசிகை - கோத்தமாலை.

உச. மதிநெறி - சந்திரகுலம்.

உரு. நாரதாதிகள் கானத்தைப்பாட. மைந்தன் முருகக்கடவுள்; இவர் திருமணச்சடங்கு நடத்தியதை, "மருளாரும் பவத்தொடரை மாற்றிய தென்னன்மகளாய் மவுலிசூடிப், பொருளாரும் புவிவிசயஞ் செய்தரசு செலுத்தியமும் மூலைப்பூந் தேனைத், தெருளாருந் தமிழ்மதுரை நாதன்மணஞ் செயவிதிநாற் சடங்கு செய்தே, யருளாருங் கடம்பவனத் துறைகுமர குருபரனை யகத்துள் வைப்பாம்." (கடம்ப. பாயிரம், ரு.) என்னும் திருவிருத்தத்தாலுமுணர்க. இதுபற்றியே, 'சடங்குக்கந்தன்' என்பர்பின்னும்; (எ) கூ.

உரு. "நான்கெயிற் றொருத்தற் பிடர்ப்பொலி வரைப்பகை, யறுகால் குளிக்கு மதுத்தொடை யேந்த, முட்டாட் செம்மலர் நான்முகத் தொருவ, னெண்ணிநெய் யிறைத்து மணவழலோம்பப்,புவியளந் துண்ட திருநெடுமாலோ, னிருகர மடுக்கிப் பெறுநீர் வார்ப்ப, வொற்றை யாழியன் முயலுடற் றன்சுட, ரண்டம் விளர்ப்பப் பெருவிளக் கெடுப்ப, வளவாப் புலன்கொள் விஞ்சைய ரெண்மரும், வள்ளையிற் கருவியிற் பெரும்புகழ் விளைப்ப, முனிவர் செங்கரஞ் சென்னியாக, வுருப்பசி முதலோர் முன்வீழ்த் தெடுப்ப, மும்மலை யொருத்தியை மணந்தல காண்ட, கூடற் கிறைவன்." (கல். ருச.)

உசு. "பெருநீர் வையைவளைநீர்க் கூட, லுடலுயி ரென்ன வுறைதரு நாயகன், கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி, யையவாய்க் காப்புவிட் டணிபூ ணணிந்து, விரிசடை மறைத்து

மணிமுடி கவித்து, விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடி யெடுத்து, வழுதி யாகி முழுதுங் களிக்கும், பேரருளாளன்.", "மதுரை மாநகர்ப் பூழிய னாகிக், கதிர்முடி கவித்த விறைவன்." (கல். உ, உ௫.)

உஎ. எழுத்து-கையொப்பம். சோமசுந்தரக்கடவுள், பாண்டியராசாவாக வீற்றிருந்தபொழுது, 'சுந்தரமாறன்' என்று கைச்சாத்திட்டருளினர்.

உ௮. இருக்கு - வேதம். "மதிக்குலம் வாய்த்த மன்னவ னாகி, மேதினி புரக்கும் விதியுடை நன்னாள், ணடுவூர் நகர்செய் தவபவந் தடைக்கு, மருட்குறி நிறுவி யருச்சனை செய்த, தேவர் நாயகன் கூடல் வாழிறை." (கல். கக.)

## ௫ - ம் திருவிளையாடல்.

க. ஆகண்டலன் - இந்திரன்.

உ. சடங்கு - நித்தியகன்மம். அநந்தமாமுனிவர் - பதஞ்சலிமுனிவர்.

ங. ஏத் தரும் - மேன்மையைத்தரும்; துதித்தற்கரியவென்றுமாம்.

௪. நீபமாவனம் - கடம்பவனம். இருந்தது, அளவில்கால முண்டு. பணிந்து அளித்த.

௫. சொக்கத்தாண்டவமென்பது, சாந்திக்கூத்தின்வகையினுள் ஒன்றுன சுத்தநிருத்தம்; சுந்தரதாண்டவமென்றும் கூறப்படும். இது, நூற்றெட்டுக்கரணமுடைத்தென்பர்; (சிலப். பக்கம், ௩௪.)

௭. கஞ்சுகம் - சட்டை. இதஞ்செய் அசஞ்சலன். உளம் நிறைஞ்சு - மனமகிழ்ந்து.

## ௬ - ம் திருவிளையாடல்.

க. நன்கு - இன்பம்.

உ. உடு - நட்சத்திரம்.

ங. இவ்வளவையென்றது, சோற்றுமலையை.

௪. முதுமடைநூல்-முதிய பாகசாஸ்திரம். தெய்வவான் வழுதி, விளி.

௫. தேவி, விளி.

௬. வெஞ்சோறு - சோறு. பூதம் அமைத்தது.

எ. எண்மை - எளிமை.

௮. மிதவை - சோறு.

## எ - ம் திருவிளையாடல்.

க. துய்த்தும் - உண்டும். குறள்பூதம்; தனு - உடம்பு.

உ. அடுக்களை - மடைப்பள்ளி. அறு - மிகு. ஆவி - புகை.

ங. ஈறு - பூமியின்கீழெல்லை.

௫. பரிதாப வெப்பம் - மிக்கவெப்பம். அமராமல் - அடங்காமல்.

௬. எழ - மிக. வேகவதியாறு-வையைநதி.

எ. சென்றநீர் - கிழக்கேசென்ற வெள்ளம். மன்றுநீர் - மிக்கு வரும்வெள்ளம்; மண் துறுநீர், மண்ணிலே ஊறுகின்றநீருமாம்.

௮. ஆரவும் - உண்ணவும். அயினி. சோறு.

௯. கண்டது - செய்தது. பந்தையும் நீராவியையுமுடைய வாவி.

க0. காவணம - பந்தர்.

கக. ஒலிட - முழங்க. "பனிக்கதிர்க் குலவன் பயந்தருள் பாவையைத், திருப்பெரு வதுவை பொருந்திய வந்நாட், சொன்றிப் பெருமலை தின்று நனி தொலைத்த, காருடற் சிறுநகைக் குறுந்தாட் பாரிட, மாற்ற தலந்த நீர் நசை யடக்க, மறிதிரைப் பெருநதி வரவழைத் தருளிய, கூடலம் பதியுறை குணப்பெருங் கடவுள்." (கல். க௪.)

## ௮ - ம் திருவிளையாடல்.

க. பரவசத்தைவிட்டுக் கேண்மின்.

உ. கதம்பக்கான் - கடம்பவனம். நாளில் - காலக்கிரமத்தில்; (க௨) கக. மனத்தினைத் தன்னுடைநினைவின் ஆக்கினுள்.

ங. சதமுறை . பலமுறை; (ங0) ஙக. அதர்படும் - வழிப்படுகின்ற. தாய் அமங்கலி. உததி - கடல். திருவளத்தடைத்து - அங்கீகரித்து; திருவுளம்பற்றி.

௪. பயம் - பிரயோசனம்.

௫. மோனமாக இருந்தது. முகச்சோகம் - துக்கமாட்டம்.

சு. ஏதம் - துன்பம்.

எ. சண்டம் - வேகம்.

கூ. அங்கிமூலை - அக்கினிமூலை. "மாமியாடப் புணரியழைத்த,காமர் கூடற் கிறைவன்" (கல். உகூ.)

க0. மனோகரம் - மகிழ்ச்சி.

### கூ - ம் திருவிளையாடல்.

க. வழுத்தி - சொல்லி; "வழுத்தீர் மதிச் செங்கண்மால்" (அழகர்கல. எஎ). மாதா - தாய். புணரி - கடல்.

உ. பெருமையால் வந்த.

ங. காதலன் - கணவன். நரலை - கடல். மடந்தையர் ஆடாரென்பர்.

ச. யாய் - தாய். மன்றல் - கலியாணம்.

ரு. அவை - சபை. நம்ம - நம்முடைய; தனித்தன்மைப்பன்மை. அல்லோலம் - அலை. மாமடிகளென்பது மாமனாரென்னும் பொருளைத் தரும் தொடர்சொல்; (உஉ) கூட : "நின்பால் வந்தனென் மாமடி."; "எழுமைக் கலைத் துய்ந்தொழிந்த வொருமாமடிகளொருமுருட்டு, மோத்தை ... பெற்றமைபாடமெரிக்கபாடத் திறமினே" (தக்க. சசு); "மாமடிகளிடு சாபமும்." (மீனாட்சி. அம்புலி. சு.)

எ. உந்தை - உன்றந்தை.

அ. தடாதகை, எழுவாய்.

கூ. தெய்வத்தனு - திவ்யசரீரம்.

### க0 - ம் திருவிளையாடல்.

க.—(கக) ரு.

ங. உக்கிரப்பெருவழுதியார் சடையோடுபிறந்தனரென்பதை, "பிறநலைப்பாந்தட் சுமைதிருத் தோளிற், றரித்தல கனிக்குந் திருத்தகு நாளினொருநாட் டிருவயிற் றுளைட னிருந்த, நெடுஞ்சடை யுக்கிரற் பயந்தருளிமலன்" (கல். எஅ) என்பதனாலும், "மேவலோன் விமலைதடா தகைவயிற்றுக் கிரனென்றோர், நன்மகவாய்ச் சடையொடுமூற் பவிக்க" (கடம்ப. இலீலா. க0) என்பதனாலும் உணர்க.

ச. ஒலித்து - ஒலிப்பித்து. செய்யாடல் - செய்விழவு.

ரு. உருவம் உக்கிரமானதுகொண்டு.

எ. முடிசூட்டியவர், சுந்தரமாறர்.

அ. சடிலம் - சடை. விதுகுமிழ்ப் பெருவழுதி - சுந்தரமாறர்.

### கக - ம் திருவிளையாடல்.

க. காலத்திற் கடப்பர்.

உ. வளை, செண்டு என்பன ஆயுத விசேடங்கள். அறிவடகிரி - எல்லாராலும் அறியப்படும் மேரு.

ங. 'வடிவணங்கு' என்பது பெயர்.

ச. அபிடேகச்சொக்கன் - கிரீடத்தையணிந்த சொக்கநாயகர்; அபிடேகம்-கிரீடம்; வைஷ்ணவஸம்பிரதாயத்திலும் இப்பெயர் இப்பொருளில் வழங்குகின்றது.

ரு. இச்செய்யுள், "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, வப்பார் சடையப்பன்" (திருவா. திருவம்மானை. கக.) என்னும் திருவாக்கின் பொருளைத் தழுவியது.

### கஉ - ம் திருவிளையாடல்.

க. வேலை-கடல், காலம், தொழில்.

உ. கொள்ளை - கடல்கொள்ளை.

ங. எவரும் இறப்பம். தம்பம் - பற்றுக்கோடு; "தம்பத்தனை நிந்தித்தொருவேள்விதொடங்குந், தக்கன்" (தத்துவ., பிள்ளை. சிற்றில். ரு.)

ச. மேகங்கள் நான்குவகை; "மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழ" (கம்ப. சுந்தர. ஊர்தேடு. கசக.)

ரு. அணுக்கள் - உயிர்கள்.

சு. கொண்மூக்கள் - மேகங்கள். வள்ளுறை - பெரியதுளிகள்.

எ. கூடம் - வீட்டின் ஒருபகுதி, வஞ்சனை.

அ. நீர், முன்னிலைப்பன்மை. ஆதரம் - அன்பு.

கூ. கருவி - தொகுதி.

க0. புயல் - மேகம், நீர். ஆசை - திசை. சடைப்புரை - சடையின்உள் வெளி.

கஉ. போற்ற - பாதுகாத்தற்கு.

கங. கொண்மூ, விகாரம்.

### கங - ம் திருவிளையாடல்.

உ. வெள்ளுநீர்நிழல், ஆருங்கழலெங்க. மனோகரம் - மகிழ்ச்சி.

ங. சற்பம்=சர்ப்பம்-பாம்பு. பொக்கணம் - ஒருவகைப்பை; "சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்" (திருச்சிற். உ௯உ.) எனவும், "சுட்டி வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும்" (திருவிளை. எல்லாம். ங.) எனவும் வரும்; பின், "பொக்கணச் சித்தன்" என்பர்; கக.

ச. முத்திரை - அடையாளம்; சித்தவேடத்திற்குரியகுண்டலம். குஞ்சிச்சடை - சிறுசடை.

ரு. ஆழிமண்கடவாமல் - கடலானது மண்ணைக்கடவாமல். ஈழம் - பொன்.

எ. ஆதிநாதன் - நவசித்தர்களில் ஒருவர்; சிவபெருமானென்பது மற்றொருபொருள். தோதகம் - குறிப்பு.

அ. கரப்பெருங்குன்று - யானை. ஐய - சிறிய. அம்பலம், சிலேடை.

௯. காந்தன் - தலைவன். குழப்பி - குழம்பச்செய்து.

க0. முறைசெய்வோர்-வைலாளர்.

கக. தக்கரம்=தஸ்கரம் - கள்ளத்தன்மை.

கஉ. அனிலமார்மூலை - வாயுமூலை.

கங. வேத்திரம் - பிரம்பு. கஞ்சுகியர் - சட்டையிட்டோர்.

கச. பூண்தகும்நீற்று முண்டி - அணியத்தக்க திருநீற்றாலாகிய திரிபுண்டரத்தையுடையாய்.

கரு. அநுபமன்-ஒப்பில்லாதவன். நீத்து - வெறுத்து.

கசு. மதித்தவன் - மதிக்கப்பெற்றவன். என்பாங்கு - என்னிடம்.

கஎ. என்னி - என்று அகத்தியமுனிவர் சொல்ல.

## கஅ - ம் திருவிளையாடல்.

க. ஆசையற்றுமொழிந்தான். அறிவேமென்று அரசன்கருதி.

உ. ஆக்கினைச்சித்தர் - வலிமையால் எல்லாம் செய்விப்பவர்; இஃது, எல்லாம்வல்ல சித்தமூர்த்தியின் திருநாமம். கன்குற - தெளிய.

ங. சடக்கென,ஒலிக்குறிப்பு; சடக்கெனத் தின்னென இயைக்க; "சடக்கென, வாங்கயின்று." அ. கண்கொடு ஏவினன்.

௬. அழல் விழித்து - தீப்புறப்பட விழித்து. கண் - கணு, விழி. வேழம் - கரும்பு, யானை.

௭. "நதிமதந் தறுதண் புகர்கொலை மறுத்த, கல்லிப மதனைக் கரும்பு கொள வைத்த, வாலவா யமர்ந்த நீல நிறை கண்டன்." (கல். ங.ங.)

எ. தந்து - நூல். நாளம் - தண்டு. ஏகாவலி - ஒற்றைவடமாகிய முத்த மாலை.

௯. உளமழன்று. சித்தர்க்குவென்றி.

கக. சோமசுந்தரக்கடவுளின் ஆலயத்தை யாண்டும் பெரியகோயிலென்பர். பணி - திருவிளையாடல், ஆணையுமாம்.

## கரு - ம் திருவிளையாடல்.

க. இயல்வாணர் - புலவர்கள்.

உ. தவிசு - ஆசனம். கோணம் - சதுரம். பாஅறி குரனப்பலகை: (பதி) உ. (கக) அ.

ங. ஆய - ஆராய. நீடு ஆசனம் - பெரிய ஆசனம். பரிவு - அன்பு.

ச. மண்டபத்தடை நடு - மண்டபத்தில் நடுவே; இடை, ஏழாம்வேற்றுமையுருபு; இடைநடு - ஒருபொருட்பன்மொழியுமாம். தாங்குதல்கொடாது - தாமதியாது; (கஎ) ௬.

ரு. பயன்கள் நான்கு - அறமுதலியன. முத்தமிழ்க்கோத்து - முத்தமிழ்நூல்களின் தொகுதி; ௯, க0; (கஅ) எ. நற்றவன் - சிவபெருமான். செற்றம் - தணியாக்கோபம். சித்திரம் - வியப்பு.

௬. செந்தமிழை - செந்தமிழ்ச்செய்யுட்களை; எ. உயர்ந்த, முற்று.

எ. தொடர் - நட்பு. மலைந்து - மாறுபட்டு.

அ. இரங்கி வந்தனன்.

௯. இருந்திர் - இருந்தனிர். போக்கலாயிருப்பின் - நீக்குதற்குரியதாக இருந்தால்.

க0. அதிர்பட - வழிப்பட.

கக. கேவலனல்லன் - ஸாதாரணனல்லன்.

கஉ. பொருள் - அகப்பொருளிலக்கணம்; பொருள்நூல் - அப்பொருளிலக்கணநூல். "அன்பினைந்திணை" என்பது, இறையனாரகப்பொருளின் முதற்சூத்திரத்தின் முதற்குறிப்பு; "உலகிய னிறுத்தும் பொருண்மரபொடுங்க, மாறனும் புலவரு மயங்குறு காலை, முந்துறும் பெருமறை முளைத்தருள் வாய்கா, லன்பினைந் திணையென் றறுபது சூத்திரங், கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத், தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்.", "அருமறை விருப்புமுலகியல் வழக்குங், கருத்துறை பொருளும் விருப்பட நினைந்து, வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி, யைந்திணை வழுவா தகப்பொருளமுதினைக், குறுமுனி தேறவும் பெறுமுதற் புலவர்க, ளேழெழு பெயருங் கோதறப் பருகவும், புலநெறி வழக்கிற் புணருலகவர்க்கு, முற்றவம் பெருக்கு முதற்றுறை பதர்க்கு, நின்றறிந் துணரத் தமிழ்ப்பெயர் நிறுத்தி, யெடுத்துப் பரப்பிய விடையவூர் நாயகன்" (கல். ௩, ௬௩.)

கச. ஒருகவிதைதொடா - ஒருசெய்யுள் தொடுத்து; தொடுத்தவர், சிவபெருமான்.

கரு. நிறைந்திருந்தார் - மகிழ்ந்திருந்தார்.

கஎ. விடுவிப்பான் காரணமா - விடுவித்தற்பொருட்டு.

க௯. சோமசுந்தரக்கடவுள் புலவர் வடிவங்கொண்டு சங்கப்புலவருக்கு இடையே நெடுநாள் எழுந்தருளியிருந்தபொழுது, அவர்கொண்டருளிய திருநாமம், மதுரைப்பேராலவாயாரென்பது; (கஅ) அ.

### க௯-ம் திருவிளையாடல்.

க. விசுத்தலம் - நிலாமுற்றம்.

உ. மாதேவி - பாண்டியன்மனைவி. மாருதவசித்தால் - காற்றுவழியால்.

ச. கிழி - துகிற்பொதி; ஆகுபெயர். ஆசிரியர் - சங்கப்புலவர். சீயம் - சிங்கம். தூக்கினன் - தொங்கக்கட்டினன்.

ரு. சமாதி - சங்கற்பம்; (உ௩) ச; (உஅ) உக; (சஎ) உ.

சு. அதில் - அக்கவிகளில்; சாதியொருமை. ஆவிநன்கு - மனமகிழ்ச்சி; "என்னாவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்." (சீவக. கனக. ௩உ.)

எ. நீங்கலில்லாமல் - நீங்காமல்.

அ. தந்தை - சிவமுனி. மெல்லச்சொல்லுவான்.

க0. 'கொங்குதேர் வாழ்க்கை' என்றுங்கவிதைவருமாறு: "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே" (குறு. உ.); "பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ்கூறிப், பொற்குவை தருமிக் கற்புடனுதவி, யென்றுளங் குடிகொண் டிரும்பயனளிக்குங், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்." (கல். க.)

சக. கவிதை எடு - செய்யுள் எழுதப்பெற்ற ஏடு. வாய்மையுரியவர் - சங்கப்புலவர். நீவி - கிழி. கொள், அயல்.

சஉ. நன்பு - நன்மை. புலவர்கள் வெளிப்படையாகப் புகழவில்லை.

க௩. வேதியன் - தருமி.

கரு. அரவம் - முழக்கம்.

கஎ. இதை - இக்கவியை. நீ கொண்டுவா.

க௯. கற்றுச்சொல்வோர் - கற்றுச்சொல்லிகள். திருமுடிச்சாத்து - தலைக்கட்டு; (உ௩) ச: "தனிமுடிச்சதைத் துஞ் சாத்தி". ஆழிகள் - மோதிரங்கள். தேத்து - இடத்து.

உ0. பிழம்பு - திரட்சி.

உக. வாளா - சும்மா.

## உ0 - ம் திருவிளையாடல்.

க. "சோழனுங்கபிலன்" என்பர் பின்னும்; ௩. இதவியோன் - இன்பத்தைச்செய்பவன்; (உக) ௬: "இதவிய புல்லு மிட்டேம்."

உ. பாண்டியன் இடைக்காடனைத் தள்ளியது, கக. "உன்னுடைய மதத்தாற் றள்ளியோட்டியதென்னை" என்பதனாலும் துணியப்படும். பொலாமணி=பொல்லாமணி - துளையிடாதமணி; சிவபெருமான்: "புகவே தகேனுனக்கன்பருள் யானென்பொலாமணியே." (திருவா. திருச்சத. க0); "எம்பொலா மணிமனமிரங்கிற்றென்பவே." (பிரபு. முனியர். ௬.)

௩. இதில், சொல் உமை, பொருள் சிவபெருமானென்றதை; "என்னையிகழ்ந்தனனேசால் வடிவாய்நின்னிடம்பிரியா விமயப் பாவை, தன்னையுஞ்சொற் பொருளான வுன்னையுமே யிகழ்ந்தனன்" (திருவிளை. இடைக்காடன். க0.) என்பதனாலுமுணர்க.

௫. மின் - உமாதேவியார். மேவ - சிவபெருமான் எழுந்தருள; "முன்னிடைக்காடன் பின்னெழ நடந்து." (கல். எக.)

எ. எண்ணமொன்றிலாமல் - புத்திபூர்வமின்றி.

அ. கவிமனர் - கவியரசர்; சங்கப்புலவர்.

௯. கால் நடை.

க0. கிஞ்சில்=கிஞ்சித் - சிறிது; இது மலைநாட்டுவழக்கு.

கக. அந்தாதியென்றது, சிவபெருமான்திருவந்தாதியை; இது,கக-ம் திருமுறையிலுள்ளது. சொன்னவனாகிய கபிலன். என்னை - யாது.

கஉ. உனக்குப் போதும்மோ - உனக்கு இத்தன்மை உண்டாதல் தகுமோ.

கச. நன்புலவன் - இடைக்காடர்.

க௫. பன்னியதமிழ் - இடைக்காடர்பாடியதமிழ்ப்பாடல்கள். ஓடைப்பருப்பதந்து எருத்தம்.யானைப்பிடர்.

## உக - ம் திருவிளையாடல்.

உ. உறைழ - வீடு.

௩. நாவல்பயில் தென்புலம் - நாவலந்தீவு. நாம் அளித்த வேலை அற - அச்சத்தைக்கொடுத்த கடல் வற்றும்படி. சென்று எறி.

௪. பரவை வாக் கண்டு.

௬. சிவந்து-கோபித்து. அடிவுடிம்பு அலம்ப-பாதத்தின் ஓரத்தைக்கழுவ.

அ. சத்தி - வலி, வேல்.

௯. நினைக்கரங்கன் - நினைக்குமிடத்து. தமிழ்ச்சங்கம், முதற்சங்கம் இடைச்சங்கம் இவற்றின் நிலையையுடையதாகும். கங்கைக்கரை - பொற்றுமரைக்கரை; கங்காநதியின்கரையுமாம். ஸ்ரீஹாலாஸ்யமாஹாத்மியம், க௩-வது லீலை, ௪௬-ம் சுலோகமுதலியவற்றைப்பார்க்க.

## உஉ - ம் திருவிளையாடல்.

க. ஆகமங்களைத் திருவாய்மலர்ந்தனன்.

உ. நனிவெகுண்டு.

௩. தந்திமத்தகப்பிள்ளை-விநாயகர்; மத்தகம்-தலை. துதிக்கை-துதித்தல், தும்பிக்கை. பௌவம் - கடல்.

௬. பல கை - பன்னிருகைகள்.

எ. மூங்கையம்புதல்வன்-ஊமைப்பிள்ளை.

அ. கணநாதனொருவன் உட்புக. அத்தி - கடல். ஆகமமெடுத்து உலவிடு. புத்தி - ஞானம்.

௯. அதியனையன் - வலைச்சாதிக்கு அரசன்; 'அதிபத்தர்' என்பதனாலுமுணர்க; க0, கஅ. இவ்வரசனுடைய ஊரின்பெயர் விக்கிரமமென்று திருவுத்தரகோசமங்கைப் புராணம் தெரிவிக்கின்றது. காவல்நந்தி. செட்டி - முருகக்கடவுள்.

கக. பிறிவு - பிரிவு. வலைவீரனர் - வலைஞர். பரதன் - வலைஞன்.

கஉ. மாமடி - மாமனர்; விளி; (௯) ௫ - ம் செய்யுட்குறிப்பைப் பார்க்க. மறைநூல் முறைதரு கயிறு - வேதமாகிய நூலால் முறையே உண்டாக்கப்பெற்ற கயிறு; வேதக்கயிறு.

௧௩. வாங்கு கயிறு - குறுக்கேமறித்து வாங்கும் கயிறு. கண்கள் - வலையின் இடைவெளி. மணி - உருண்டைகள். "ஒரு சிறுகுடிப் பரதவனாகிப், பொன்றலைப் புணர்வலை கொடுங்கர மாக்கி, நெடுங்கடல் கலக்கு மொருமீன் படுத்த, நிறையரு ளுயகன்?" (கல். ௧௧.)

௧௫. மிடித்தனம் - வறுமையுற்றேம்; "இடைமிடித் தார்தமைத்தேடி" (திருவெங்கைக்கோவை, ௩௧.)

௧௬. சிலைத்து - முழங்கி.

௧௮. "அதியரைய மங்கை யமர்ந்தான் றன்னை" (திருநா. தே. திருவதிகை.) என்றதிருவாக்கு, சிவபெருமான் அதியரையன் திருமகளை விரும்பி மணஞ்செய்தருளிய இவ்வருமைத்திருவிளையாடலைப் புலப்படுத்தி விளங்குதல் காண்க.

௧௯. இறைபணியே - சிவபெருமான் திருவிளையாடலே.

௨௦. ஆதிமுனி, விளி.

௨௨. புரியா - புரிந்து. "எண்ணெணுத்தமப்பத்தர்" என்பர் பின்னும்;

௨௩. மன்றற் பேதை - மங்களேசுவரி. திருவுத்தரகோசமங்கைப்புராணம், அத்தலத்தில் தவஞ்செய்த முனிவர்கள் ஆயிரவரென்றும் அவர்களுக்குக் காட்சிகொடுத்தருளியவருடைய திருநாமம் காட்சிகொடுத்தநாயகரென்றும் கூறுகின்றது; பார்ப்பதிதவம்புரிந்த அத்தியாயம் பார்க்க.

௨௩. பத்தர்நெங்கண்-பத்தரிடத்து, உத்தர ஆகமகோசங்கள் - விடையாகிய ஆகமபுத்தகங்கள்.

## ௨௫-ம் திருவிளையாடல்.

௪. சமாதி - சங்கற்பம்.

௫. துப்பு - பவழம்; தூய்மையுமாம்.

௯. கழையதண்டு - மூங்கிற்றண்டு. கலிங்கம் - ஆடை. முடிச்சாத்து - தலைப்பாகை. காதணிகளும் கண்டிகைகளும் தாழ.

௧. வளைத்தனன் - அகப்படுத்திக்கொண்டார்.

௧௦. மாலை - மயக்கத்தை.

௧௪. வளைப்போம் - தடுப்போம்; "வள்ளணீங்கப்பெறுய்வளைத்தேனெனை" (சீவக. குண. ௩௯.).

௧௫. தனம் - கொங்கை, பொன். "இதழியுந் தும்பையு மதியமுங் கரந்து, வளைவிலை மாக்கள் வடிவெடுத்தருளி, முத்தமிழ் நான்மறை மூளைத்தருள் வாக்கால், வீதி கூறி விற்றத்த முன் வரத்தாற், கருமுகில் விளர்ப்பவறனீர் குளிப்பக், கண்புதை யாப்புத் திணியிருள் விடிய, வடமொறும் பிணித்த பாவமும் புரைக், கண்ணீள் கதுப்பினர் கைகுவி பிடித்துக், குருகணி செறித்த தனிமுத லுயகன்." (கல். ௪௬.)

௧௬. செட்டியார், விளி.

௧௭. பாலலோசனம்-நெற்றிக்கண்.

௧௯. அளகைக்கோன் - குபேரன்; சோனென்றும்பெயர் வணிகருள்வழங்கும். மழவுற - இளமையுற. மழவுறுதற்குக் குமரியாடவந்தனன்; குமரி, சிலவடை. இளை - நல்லகுலம், மூங்கில். இச்செய்யுள், "வந்தவரவென்னை" (சீவக. ௬௭. ௨௯) என்னும் செய்யுளின் கருத்தைத் தழுவிவந்தது.

௨௦. பரிசனம் - ஸ்பரிசம். தாங்குதல் கொடாது - பொறாமல்.

௨௧. 'அஞ்சி' என்றார், பழியஞ்சியாதலின்.

௨௨. 'உடையவனறிந்திடாத சரக்கில்லை' என்பது ஒருபழமொழி.

௨௪. செச்சைக்கண்ணி - வெட்சிமாலை.

## ௨௬-ம் திருவிளையாடல்.

௧. காடுவெட்டியென்பது, இவ்வரசன்பெயர். தன் இலச்சினை - மீனமுத்திரை.

௨. ஆலயம் - இந்திரவிமானம்; அட்டு, அ - யானை, ௬௪ - கணநாதர், ௩௨ - சிங்கங்களால் தாங்கப்பெறுவது; "கரியெட்டெஞ் சின்மடங்க மூலெட்டு மெட்டெட்டுக் கணமுந் தாங்க." (திருவிளை. இந்திரன். ௮௩.)

ரு. 'தென்னனொடு போராறும் வாரா வாறு தீங்குசெயக் கண்டனை' என்பதை, "வழுதி யன்றியும் வையை யும்பகை யான தென்று வருந்தினன்" (திருவிளை. விடை. கக.) என்பது தழுவிவந்திருத்தல் காண்க.

ச. முரித்து - இடித்து. இயந்திரத்தால் ஏற்றி. எயில் முரிவாய் - மதிலை இடித்த வாயில்.

ரு. மேல்விதும்ப - உடல்நடுங்க.

சு. ஆரா அன்பு - தெவிட்டாத அன்பு. தடினி - ஆறு.

எ. எற்று இலச்சினை - இடபமுத்திரை.

கo. போத - மிக.

கக. வாய்மதில், வினைத்தொகை. சேவுறுகுறி - இடபமுத்திரை.

கஉ. முறைமை வாயில் - இந்த வரலாற்றை யுடையவாயில்.

## உரு - ம் திருவிளையாடல்.

க. இன்னெறி - இனியநெறி; நல்லநடை.

ச. காவலறை - காக்கப்படுதலையுடையபொன்னறை. யூரையுமறைத்து மைந்தனைக்காத்த அமைச்சர்களென்க; "முடிசூடுவான் மறைத்துக்காத்தவமைச்சர்." (கடம்ப. இலீலா. உரு.)

ரு. சூட்டுவான் - சூட்ட.

சு. உலகம் அதிர்வுறும் - உலகம் நடுங்கும்.

எ. புரை - காசபாதம்.

கூ. தப்பி மண்விழுந்தவைகள்.

கo. வலனுடைய என்பு வைரம், இறைச்சி பவழம், கருவிழி நீலம், கவம் புருடராகம், இரத்தம் மாணிக்கம், மயிர் வயிடூரியம், நிணம் கோமேதகம், பல் முத்தம், பித்து மரகதமென்க.

கக. மாணிக்கம் எழுவகை இலக்கணமுடைத்து; இவற்றை, "மாணிக் கத்தியல் வகுக்குங் காலைச், சமனொளி சூழ்ந்த வொருநான் கிடமு, நால்வகை வருணமு நவின்றவிப் பெயருடன் பன்னிரு குணமும் பதினறுகுற்றமு, மிருபத் தெண்வகை யிலங்கிய நிறமு, மருவிய விலையும் பத்தி பாய்தலு, மிவையென மொழிப வியல்புணர்ந் தோரே." (சிலப். ஊர்காண். கஅசு-கஅஎ. உரை) என்னுமேற்கோளாலுந்தெளிக.

கஉ. சமனொளி - இலங்கைத்தீவிலுள்ள ஒருமலை; இதனை, "இலங்காதீவத்துச் சமனொளி யென்னுஞ், சிலம்பினை" (மணி. உஅ - ம் காதை, கoஎ-கoஅ.) என்பதனாலும், அம்மலையை நான்குநதிகள் சூழ்ந்துள்ளனவென்பதை, "குடுமிச் செக்கர்ச் சமனொளிசூழ்ந்த, நிரைநதி நான்கி னிகழ்ந்தனவுறியும்" (கல். ௭எ.) என்பதனாலுமுணர்க.

கரு. இதிற்கூறிய மாணிக்கத்தின் பன்னிரு குணங்களை, "தேய்க்கினெருப்பிற் சேர்க்கி னங்கையிற், றூக்கிற் றகட்டிற் சுடர்வாய் வெயிலிற், குச்சையின் மத்தகக் குறியினொ ரத்தி, னெய்த்துப் பார்வையி னோர்ந்து சிவந்தாங், கொத்த நற்குண முடையபன் னிரண்டும்." (கல். சஎ.) என்பதனாலும்தெளிக.

கச. மாணிக்கத்தின்குற்றம் பதினறென்பதை, "கருகிநொய்து தாதல் கீற்று வெருளி, இருகன் முரணே செம்ம ணிறுகன், மத்தகக் குழிவு தாரா சமிலைச்சுமி, வெச்சம் பொரிவு புகைதல் புடாயஞ், சந்தைநெய்ப் பிலியெனத் தருபதி னறும்" (கல். சஎ.) என்பதனாலும்தெரிக.

கரு. அங்கியும் அகில்விழுதழலும். சாதுரங்கமுதலியவை மாணிக்கத்தின்வகை; இங்கே மாணிக்கத்திற்குப் பொதுவாகக்கூறிய இருபத்தெட்டு நிறங்களை, நால்வகைப்படுத்தி, சாதுரங்கத்திற்குப் பத்துநிறங்களும் குருவிந்தத்திற்கு எட்டும் சௌகந்திக்கு ஆறும் கோவாங்கத்திற்கு நான்குமாகக் கூறுவதுமுண்டு; "தாமரைக்குழுநீர்" (சில. ௩சசு - ம் பக்கம்.) என்னும் மேற்கோள் முதலியவற்றையும் "கதிர்விரிபரப்பும்" (கல். சஎ.)

என்பதையும், "சாதுரங்கநிறம்" (திருவிளை. மாணிக்கம். ௩௧.) என்னும் செய்யுள் முதலியவற்றையும்பார்க்க. மேற்கூறியவற்றில் ஒத்தும் ஒவ்வாதும் இருப்பனவுள.

௧௬. தேசிடையரளவே விலைகோள், ஒளிபரத்தலே பத்திபாய்தல். முத்துக்கள் நலசம் சலசமென இருவகைப்படும்; அது பதின்மூன்றிடத்துப் பிறக்குமென்பர், பரஞ்சோதிமுனிவர்; (திருவிளை. மாணிக்கம். ௫௩ - ௫௪). இங்கே, 'காகவாகனர்திண்டோள்' என்றவிடத்து, அதில், 'ஐவாய்மான்கை' என்பது கூறப்பட்டுள்ளது.

௧௭. "உடுத்திர ளனைய காட்சியுருட்சிமா சின்மை கையா, லெடுத்திடற் றிண்மை பார்வைக் கின்புறல் படிக மென்ன, வடுத்திடு குணமா று" (திருவிளை. மாணிக்கம். ௫அ.) என முத்தின்குணம் ஆறென்பர். வயிரம் பிறக்குமிடம் எட்டு.

௧அ. வயிரத்தின் குற்றம், ௧௨; குணம், ௫; "சரைமலங் கீற்றுச் சப்படி பிளத்த, றுளைகரி விந்து காக பாத, மிருத்துக் கோடிக ளிலாதன முரித, முளை மழுங்க றன்றே, டீரா றும் வயிரத் திழிபென மொழிப", "பலகை யெட்டுங் கோண மாறு, மிலகிய தாரையுஞ் சுத்தியு நராசமு, மைத்துங் குணமென் றறைந்தனர் புலவ, ரிந்திர சாபத் திகலொளி பெறினே" (சில. ஊர்காண். ௧அ௦-௧அ௩. விசேடவுரை.) என்னும்மற்கோள்களானுமுணர்க.

௧௯. ஆகுலக்கண் - பசுவின்கண். பூவைப்பூ - காயாம்பூ. நீலத்தின் ஒளிவகையை, "கோகுலக் கழுத்துக் குவளையரும்ப, ராகுலக் கனகனாவிரிச் சாறு,............காயா நெய்தல் கனத்தல் பத்தி, பாய்த லெனக்குண ம் பதினென் றுமே" (சில. ஊர்காண். ௧௭௦. விசேடவுரை.) என்னுமேற்கோளாலும் உணர்க.

உ௦. வீரை - நிருவகைமரம். பவழத்தின் குற்றம் இன்னவென்பதை, "கருப்பத் துளையவுங் கல்லிடை முடங்கலுந், திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்" (சில. ஊர்காண். ௧௯௦ - ௧௯௧.) என்பதனாலும், பச்சையின் குணங்களை, "நெய்த்தன் மயிற்கழுத் தொத்தல்பைம் பயிரிற், பசுத்தல் பொன்மை தன்னுடன் பசுத்தல், வத்திபாய்தல் பொன்வண் டின்வயி, றொத்துத் தெளிதலொ டெட்டுங் குணமே" (சில. ஊர்காண். ௧௮௪, ௧௮௫. விசேடவுரை) என்பதனாலுமுணர்க.

உ௧. பச்சையின்குற்றம் எட்டும், "கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்றுப், பொரிவு தராச மிறுகுதன் மரகதத், தெண்ணிய குற்ற மிவையென மொழிப" (சில. ஊர்காண். ௧௮௪, ௧௮௫. விசேடவுரை) என்பதனால் ஆராய்ந்தறியன.

உஉ. தோராவல்லி, தோரமல்லியெனவும் கனகதோராவல்லி, கனகபுஷ்பராகமெனவும் வழங்கும்.

உ௩. நயம் - புதுமை, ஒன்பது. மறைபறை - வேதம் சொல்லுகின்ற.

## உ௫ - ம் திருவிளையாடல்.

௧. பவநசி - பாவமாகிய இருள்.

௨. எண்ணி, நெட்டோலையைக் கட்டி விட்டனன்.

௩. பதிகள் - ஊர்கள். என்று நெட்டோலையைக் கட்டிவிட்டனனென முன்னேகூட்டுக.

௪. எண்கிரி - எட்டுமலை; அவை பலவாறு வழங்கும்; அவற்றின்பெயர்களை, சைனர்களுள் வழங்குவதாகிய, "பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி, யருங்குன்ற மபேராந்தை யானை - யிருங்குன்ற, மென்றெட்டு வெற்பு மெடுத்தியம்ப வல்லார்க்குச், சென்றெட்டு மோபிறவித் தீங்கு" என்னும்பழைய வெண்பாவாலும், "அஞ்சனங் கொளுஞ்சங் கோவத் தனந்திரிகூடங் காஞ்சி, குஞ்சர சைய மேமகூடமே விந்த மென்று, மஞ்சிவர் வரைக ளெட்டும் வைகுறு மமணர்" (திருவிளை. யானை. எ.) என்பதனாலுமுணர்க; மதுரையைச் சூழ்ந்த எட்டு

மலைகளென்பாருமுளர். வாழ்ந்து - மகிழ்ந்து. சட்டென - விரைவாக.

௯. மன்று - பொதுவான இடம்; அசோகமரம் அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களென்னு மிவர்கள் தங்கிய ஐந்திடங்கள்கூடி யமன்றின்கண் நிற்பதாகச்சொல்லப் படுமாதலின், 'மன்றுநீ டசோகநீழல்' என்றார்; "சந்தி யைந்துந் தம் முடன் கூடி, வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப், பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்" (சில. நாடுகாண். ௧௯ - ௨௧.) என்பதனாலு ணர்க.

௬. மொஞ்சகம்-மயிலிறகின் தொகுதி; மந்திரித்தற்குச் சைனர் கையிற் கொள்வது; "தழையுலாங்கையர்" (திருவிளை. விருத்த. ௧.).

௮. நீட்டு - தூரம். அதிர்வு - முழக்கம். 'முடிமணியெனக்களித்த' என்றதனால், இவன்காலத்து இரண்டு திருவிளையாடல்கள் நடந்தன வென்பது அறியப்படுகின்றது.

௧0. அட்டாலை - மதின்மேல்மண்டபம். அது ஞாயிலென்றுங்கூறப்படும். கண்டான் - கேட்டறிந்தான்.

௧௧. முன்னர் உழைமதந்தவழ் எயில் - கிழக்குமதில்; ௧0: "கீழ்பாலிஞ்சி" என்றார்; முன்னர் - முதலிலென்றுமாம்; உழை - மான்.

௧௨. தொப்பாரம் - வீரர்கள் தலையிலணியும் முடிவிசேடம்; இஃது இக்காலத்தில் ஆலயங்களிலே காணப்படும்.

௧௩. எழ - மிக.

௧௪. அருவியோங்கல் - யானை. இலக்கு - லக்ஷ்யம்.

௧௫. திருமாலும் பிரமனும் இந்திரனும் போற்ற. யானை ஆலயம்-யானைகளாற் சுமக்கப்படும் இந்திரவிமானம்.

௧௭. செல் - மேகம். அரி முகமால் வாளி - நரசிங்காத்திரம். குளம்-நெற்றி. இலத்திவாய் - அபானம். உதப்பி - வயிற்றிற்சேரணியாமலிருக்குமுணவு.

௧௮. அத்தி இலத்தி சொரிந்தது - யானையானது இலத்தியைச் சொரிந்தது.

௨0. மானிடர் அடைய - மனிதர் எல்லாரும்.

௨௨. தலை பறி - தலைமயிரைப் பறித்துக்கொள்கின்ற.

௨௩. கல் - மலை.

௨௪. வழுவுடைக்கடவுள் - சுந்தரேசர்.

௨௫. கச்சம் - அளவு.

௨௭. பிறங்க நின்றான்.

௨௯. பருப்பத இபத்தை - மலை போன்ற யானையை. அவதானம் - தொழில் வரலாறு; திருவிளையாடல். காவலன் இருந்தினன்.

## ௨௭-ம் திருவிளையாடல்.

௧. சாத்தவர்கள் - சென்றுசென்று வியாபாரம்செய்யும் வாணிகர்திரள்; இது, ஸார்த்தமென்னும் வடமொழியடியாகப் பிறந்ததென்பர். புரவிநூல் - அசுவசாஸ்திரம். குதிரையிட்ட - குதிரைகளையளித்த; "இனப்பரியிட்டதன்றி" என்பர் பின்னும்; (௩0) இப். திருவாதவூரர் புராணத்தில், 'குதிரையிட்ட சருக்கம்' என்னும் பெயரும் இங்கே அறியற்பாலது.

௯. மதூகம் - இருப்பைமரம்; 'நெட்டிலையிருப்பை' என்னும் அகவல், "நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடா தாயிற் பீடைப் பிடியின், கோடேய்க் கும்மே வாடிலோ பைந்தலைப், பரதர் மனைதொறு முணங்குஞ், செந்தலை யிறவின் சிரேய்க் கும்மே." என்பது. இது தமிழ்நாவலர் சரிதையிற் கண்டது. இருப்பையும் மகிழும் அத்தலத்திற்குரிய விருக்ஷங்களென்று தெரிகின்றன; "கமழ்மதுக மகிழ்வாத புரத்து." (கடம்ப. இலீலா. ௨௭.) அத்தலத்தில் ஸ்ரீமாணிக்கவாசகர்க்குச் சிவபெருமான் திருச்சிலம்பொலியைக் காட்டியருளினர்; "வாத வூரினில் வந்தினி தருளிப், பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" (திருவா. கீர்த்தி. ௩௨ - ௩௩.) என்பதனாலும், இந்நூல்,

உஅ - ம் திருவிளையாடல், கச - ம் செய்யுளாலுமுணர்க. வேதநாதரென்பது, அத்தலத்துச் சிவபெருமானுடைய திருநாமமாதலின், 'வேதநாயகனூர்' என்றார்; "வேதியர்" என்பர்மேலும்; ச. திருமால்வந்து பூசித்தபொழுது "வேதாஹம்" என்றசுருதி, சிவலிங்கப்பெருமானிடமிருந்து தோன்றினமையின், இத்திருநாமம் அமைந்ததென்று அத்தலத்து வடமொழிப்புராணம் தெரிவிக்கின்றது.

ச. ஆதியாகிய ஆதித்தன். சோமன் - சந்திரன். வாதராசன் - வாயுதேவன்.

ரு. வளை - சங்கு.

சு. மானமங்கலமென்பது, திருவாதவூரருடைய முன்னையோரிருந்த ஊரின்பெயரென்று தெரிகின்றது; இந்நூல், உஅ - ம் திருவிளையாடலில் அ - ம் செய்யுளிலுள்ள, "இருநிலிருநின் மானபுரமென்னுங் கொடுமை பொறுக்ககிலேன்" என்பது ஆராயத்தக்கது. ஒரு கணநாதர், சிவபெருமான்கட்டளைப்படியே வந்து திருவாதவூரராக அவதரித்தன ரென்பதை, "கணநாதர் தமிலொருவன் விடை, யிற் போந்து கமழ்மதுக மகிழ்வாதபுரத்து வாழ், தணராமாத் தியர்குலத்துட் டோன்றி" (கடம்ப. இலீலா. உஎ.) என்பதனாலுமுணர்க. இந்நூலில் (உஉ) அ: "இத்தகைமையிற்றிகழு மெல்லையினி லுட்புக விலங்குகண நாத ரொருவன்" என்றது இங்கே அறியற்பாலது. இச்சரிதவிரிவை, திருவுத்தரகோசமங்கைப்புராணம், பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்தாலுமுணர்க.

எ. முன்னைநூல்-வேதமுதலியன. தன்னுடைய நன்னுமத்தால் தலைமைசேர் நாமம் - தென்னவன் பிரமராயரென்பது; ஆல், ஓசை; "தென்னவன்பிரமராயனெனக்கொண்க" என்பர், பின்னும்; கக; பிரமராயனென்பது, பிரமாதிராயனெனவும் சிலாசாசனங்களிற் காணப்படுகின்றது.

அ. ஏற்ற தாழ்வு கேட்டிருத்தல் - புகுந்துள்ள குறைகளை விசாரித்துப் பரிகரித்திருத்தல்.

கூ. செய்தி - நாற்படைச்செய்தி.

கச. கோடகம் - குதிரை.

கரு. துற்ற - நெருங்கின. கொளப்படும் - கொள்ளல்வேண்டும்; தேற்றவினை.

கசு. மறு மண்டலம் - வேற்றரசர் தேயங்கள். பந்தி - குதிரைச்சாலை. கட்டத்தகும், தேற்றவினை.

கஅ. அகம் - பாவம். வீந்தனவென்று பகர்ந்தனர். அறை - பொன்னறை. புரவிநூல் - அசுவசாஸ்திரங்கள்; சூரியனும், சாலிகோத்திரனும அந்நூல்கள் செய்யப்பட்டுள்ளனவென்பர்.

ககூ. மாற்றம் நன்று.

உ0. புஞ்சம் - தொகுதி. கண்காணியின் - மேற்பார்வையுள்ளோனால்; இப்பெயர், இப்பொருளில் தென்னாட்டில் வழங்குகின்றது.

உக. பரிக்கும் செம்மையோர் - சுமத்தற்குரிய நல்லொழுக்கமுடையோர்; "பொன்பரித்தவரை" என்பர்பின்னும்; சக.

உரு. பெண்ணை அன துதிக்கை பிள்ளை - பனைபோன்ற துதிக்கையையுடைய பிள்ளை; விநாயகக்கடவுள்.

உச. ஆம் குமரன் - பெருமையையுடையவராகிய முருகக்கடவுள். ஓங்கும் அரன். கனி - மாங்கனி.

உக. என்று ஆர் - சூரியன் பொருந்துகின்ற; சூரியனை ஒத்தவென்பதுமாம். இச்செய்யுளிலுள்ள நயங்கள் மிகப்பாராட்டற்பாலன.

உஎ. வாய்த்த பேரண்டத்தான் - அண்டங்களைப்பெற்றருளியவர்.

௩0. மற்று மன்னர் - வேறு அரசர்கள். பல்லியம் - பலவாத்தியம்.

௩க. காலை - சிவபெருமான் திருவடியை. கானை - திருக்கானப்பேர்; காளையார்கோயில். ஐராவதம், தனக்கிருந்த சாபத்தினின்றும்பொருட்டுச் சிவ

பெருமானை வழிபட்டதென்பது அத்தலபுராணவரலாறு; "மானமா மடப்பிடி வன்கையா லலகிடக், கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்" (திருஞா. தே.) என்பதனாலுமுணர்க. ஐராவதத்தால் உண்டாக்கப்பெற்ற, மிகப் பெரிதான தடாகமொன்று, யானைமடு வென்னும் பெயருடன் இன்றும் அத்தலத்தே உள்ளது.

௫௨. பகல் - சூரியன். அந்தணன் - பிரமன். திருமான்மைந்தன் - மன்மதன். கோடுடைமாமுனி - கலைக்கோட்டுமுனிவர். பூமகள் - பூமிதேவி. பூழியன் - பாண்டியன். காரணவன் - சுந்தரேசுவரர். சோமன் - சோமேசுவரர். காளை - காளையீசர்; அத்தலத்திற் சுந்தரேசுவரர், சோமேசுவரர், காளையீசரென்னு மூன்று சிவலிங்கப் பெருமான்களுடைய சந்நிதிகள் உள்ளன. விக்கிரமசோழன்மகள் சுகந்தகேசியை மணம்புரிந்த வரகுணபாண்டியர், அவளுடைய அழகின்மிகுதியைக்கண்டு அத்தலத்திற் சிவபெருமானுக்கு அர்ப்பணஞ்செய்தனரென்பதும் அவளுடைய கூந்தலின் நறுமணம் எங்கும் பரவியதுபற்றி அத்தலம் சுகந்தவனம் அல்லது கந்தவனமென்று பெயர்பெற்றதென்பதும் அத்தலபுராணவரலாறுகள்.

௫௩. 'மொய்யார் பொய்கை' என்பது, திருப்பெருந்துறையிலுள்ள ஒரு தீர்த்தம்; "மொய்யார் தடம்பொய்கை புக்கு" (திருவா. திருவெம். ௧௧.) என்பதனாலுமுணர்க. திருப்பெருந்துறையென்பது, பிருகத்தீர்த்தமென்று வடமொழியில்வழங்கும்; இத்தலம் இக்காரணப்பெயர்பெற்றதை, திருப்பெருந்துறைப்புராணத்துள்ள பெருந்துறைப்படலத்தாலுணர்க.

௫௪. வளை - சங்கு. நாகம் - புன்னை; நாகம் நித்திலம் காட்ட.

௫௫. மூன்றுநூறுமறையவர் - மூந்நூற்றுவர்; இவர்கள் இத்தலத்திற் சிவபெருமானைப் பூசித்தல் முதலிய வழிபாட்டிற் குரியோர்; தில்லைமூவாயிரவரைப்போல. இறைவியின் அமரராக்குமென்க.

௫௬. சந்தை - வேதம்; சிவபெருமான் உபாத்தியாயர் வேடம்பூண்டு அத்தலத்தில் ஓரிடத்திற் சிலநாளிருந்து மேற்கூறிய மூந்நூற்றுவர்களுடைய பிள்ளைகளுக்கு வேதத்தை ஓதுவித்தமையின், 'சந்தைபடுந்துறை' என்றார்; "வேதநாயகற்கு" என்பர் பின்னும்; ௬௫. ஓதுவித்த இடம், பள்ளிக்கூடமென்று இன்றும் வழங்குகின்றது. தொந்திகொள் தந்தி - விநாயகர். குருந்தமரம் - இத்தலவிருக்ஷம்.

௫௮. கலைச்சங்கம் - வித்தையின் தொகுதி; ஆடையின் தொகுதியென்பது மற்றொருபொருள். மறையுருவங்கம் - திருவாதவூரர்.

௫௯. சிலும்ப - சிலிர்ப்ப.

௬௧. பாக்கியம் - புண்ணியம். அறுதியிட்டு - நிச்சயித்து.

௬௨. நீங்கள் போய் உரையும்.

௬௩. ஒப்பார்போல - இராசகாரியங்களை ஒழுங்குபடச்செய்யும் இயல்புடையவரைப்போல; "பெரிய செல்வரொப்பார்போல்", "மனமகிழ்ந்து விரைந்தொப்பார் போலச் சென்று" என்பர் பின்னும்; ௬௪, ௭௧; "ஒவ்வாதார் தாமெனைவ ரொப்பார்மற் றெனைவர்" (சீவக. கேம. ௧௩௨.) என்பதையும் அதனுரையையும் பார்க்க.

௬௫. காசு இல் நான்மறை. எட்டால் - அஷ்டாங்கவந்தனத்தால். அஞ்சினால் - ஐந்து அங்கவந்தனத்தால்.

௬௬. நோக்குபதேசம் - சக்ஷுர்தீக்ஷை.

௬௮. முதலடியிரண்டும் நிரனிறை.

௬௯. சிவபாக்கியம் - சிவபுண்ணியம்; என - என்றுசொல்ல. பரங்கண்டவர் - திருவாதவூரர்.

௭௧. சபவடம் - ஜபமாலை. மகித்த - நினைத்த; இறந்தவென்றுமாம்; "மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" (தாயு. பரா. ௧௬௧).

௭௨. சாத்தல் - வேதம்; திவ்யப்பிரபந்தமோதுதலைச் சாத்துமுறையென்

னும் வழக்கமும் இதனைவலியுறுத்து கின்றது.

கச. ஞானப்புதல்வர்கள் - ஞான புத்திரர்கள்; சிஷ்யர்கள்.

கரு. குருந்தமரத்தின்கீழே சிவ பெருமான், தொளாயிரத்துத்தொண் ணூற்றென்பது மாணக்கர்களுடன் ஞானசாரியராக எழுந்தருளியிருந்த னரென்று உணர்க; திருவுத்தரகோ சமங்கைப்புராணத்தில், பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்திற் கூறப்பெ ற்றுள்ள, திருவாதவூரருடைய பண் டைவரலாறு இங்கே அறியற்பாலது. புதல்வர் - மாணக்கர்.

கஅ. திகழ்வ-அம்மனைமுதலிய வி ளையாட்டுக்கள். 'மெய்' என்பது, திரு வாசகத்தில், திருச்சதகத்தின்முதற் குறிப்பு.

கக. ஊண் உறக்கமின்றி உடல் வருந்தி. கேட்டன அல்ல.

கூக. தென்னவர் - தென்னாட்டி னர்.

கூஉ. பாசுரம் - ஓலைப்பாசுரம்.

கூங. மன்னவற்பிழைத்தல்-இரா சத்துரோகம்.

கூரு. தேமால் - தெய்வமாகிய திரு மால். தாமா - தாவுகின்ற குதிரை.

கூகூ. வேந்தன் - பாண்டியன். உட லம் வருந்த. இதிலுள்ளவரலாறு, இங் கேகூறப்பட்டவண்ணம் திருப்பெரு ந்துறைப்பழையபுராணத்துள்ளது; இக்கதையிற்சிலபகுதி, திருப்பெருந் துறைப் புதியபுராணம், பெருந்து றைப்படலத்தால் நன்குபுலப்படும்.

கூஎ. உணர்த்தி - துயிலுணர்த்தி.

கூஅ. உளம் அஞ்சேல். வேண்டுப இட்டு - வேண்டுவனவற்றைச் சேர் த்து. பை ஓலை - பசிய ஓலை, வினைக் கண் நில்லார். கட்டு ஓலை - கட்டினை யுடைய ஓலை.

கூக. கேளாது உணர்ந்துகொள் வாய். வையாளி - குதிரை நடத்தும் இடம்.

எ௦. பாரத்தை ஆளயத்து விடு வது. மெத்தன - மெல்ல.

எஉ. உயர்பு எவ்வளவுபோதும் உயர்ந்த குதிரைகள் எவ்வளவு வரும்.

கூசல் - நாணமுறல்.

எச. வகை - குறுந்தெருக்கள்.

எகூ. அணியல் - ஆபரணம். களா சி - காளாஞ்சி.

அக. தவிர்ந்து அமைச்சனுனாய்.

அஉ. இளைஞர்க்கு இனி யாருண் டென்றசொல்ல. ஆர் வெறுப்பு ஆர் உவப்பு - ஆர் பகை ஆர் நட்பு.

அரு. தனிசு - கடன்.

அச. மங்கலமுறைசெய்வோர் - நற்குணமுடைய ஏவலாளர்; "நன் னெறிமுறை செய்வோர்" என்பர் மேலும்; அஅ.

அகூ. கோடிக்க - அலங்கரிக்க. கலியாணன் - நல்லநடையையுடைய வன்.

உஅ - ம் திருவிளையாடல்.

உ. வளைத்து - தடுத்து; "வள்ள னீங்கப்பெறாய்வளைத்தேனை." (திரு வாச. குண. ருகூ.)

அ. இரு, நில், ஏவல். மானபுரம் - மானமங்கலம்; இது, குடிப்பெயரா க்கூறியிருக்கும் இகழ்ச்சிக்குறிப்பு.

க௦. 'குழைத்தாய்' என்றது, கு ழைத்தபத்து. 'சோதியே சுடரே' என்றது அருட்பத்து.

கக. மிழலைநாடென்பது திருப்பெ ருந்துறையின் பக்கத்திலுள்ளது; அ திலுள்ள வேளாளர்களின்பெருமை மிழலைச்சதகத்தால் விளங்கும்.

கஉ. நரியாது - நரித்தன்மையில் லாமல்; "நரிப்பாய் நாயேனிருப்பே னோ." (திருவா. கோயின்மூத்த. கூ).

கரு. வோமாயு - நரி. துறை - பெருந்துறை; ஆளுடைநாயகனென் பது - ஸ்வாமிதிருநாமம்; திருவாதவூ ரனை ஆட்கொண்டருளினமை பற்றி இந்த இவருக்குண்டாயிற்று; திருப் பெருந்துறையை ஆளுடையார் கோ யிலென்பதும் இதுபற்றியே.

கச. வாதையம்புரம் - வாதவூர்.

உ௦. ருதர் - கின்றேத்துவார்; மா கதர் - இருந்தேத்துவார்.

உஉ. சம்பு மா சமாதியாலே - சிவபெருமானது பெரிய சங்கற்பத்தாலே. சம்பு மா - நரியாகிய குதிரை.

உங. நீக்கு இல் நோக்கு அடியார் - ஒழிவில்லாமல் நோக்குதலையுடைய ஏவலாளர். மாறு - மிலாறு.

உச. வார வார - ஒழுக ஒழுக.

உரு. குரம் - குளம்பு. இருமை - பெருமை; இரண்டுதன்மையுமாம்.

உஎ. இணங்கன் - நண்பன்; (கம்ப. கிட். மரா. 400).

உஅ. நாயனார் - மாணிக்கவாசகர்.

உகூ. கறுழ் - கடிவாளம். தார் - கிண்கிணிமாலை. பரிச்சாத்து - குதிரைத்திரள்.

ங0. நெறுக்கென, ஒலிக்குறிப்பு. ககனம் - ஆகாயம்.

ஙக. நூறு - புழுதி. தண்டுவன - பொருந்துவன.

ஙஙூ. தலைக்கீடு - தலைச்சாத்து. குப்பாயம் - சட்டை.

ஙச. நெறி ஐந்து - கதியைந்து. பரிவத்தனம் - சுற்றுதல்; "இடம்வலம் பரிவத்திப்ப" என்பர் பின்னும்; ருசு. கரவாளம் - கைக்கத்தி.

ஙரு. சாத்தவர்கள் - குதிரைவாணிகர்கள்; "குதிரையைக் கொண்டு குடநாடதன்மிசைச், சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (திருவா. கீர்த்தி. உஎ - உஅ).

ஙசு. குதிரை ஈடு - குதிரைகளைக் கொடுத்தல். சயசயவென்று.

ஙஎ. சங்கு - வளையல். அறிவும் நாணும், காட்சியாற் சூல்கொள்ளுதலை, "இரும்புசூல் கொள்வார் வீழ்வார்," என்பதனாலுமுணர்க; (ருச) உரு.

ஙஅ. காண்டற்கு ஒட்டுமோ.

ஙகூ. அன்பர் - திருவாதவூரர்.

ச0. தோரை - பீலிவிசிறி.

சஉ. தவ்வும் - தாவும்; "தவ்வு புனல்" என்பர்: (ங0) ஙஉ.

சங. தாணு - சிவபெருமான், கட்டை.

சஉ - சங. இந்த இரண்டு செய்யுட்களின் கருத்தை "அண்டமெலா மாதார மாகத் தாங்கு மானந்தத் தனிச்சோதி யண்டந் தாங்குஞ், சண்டமறைப் பரிதனக்கா தார மாகித் தரிக்கவொரு காலத்து மசைவி லாத, புண்டரிகத் தாளசைபப் பாச நீக்கும் புனைகரத்தாற் பரிபூண்ட பாசம் பற்றிக், கொண்டரச னெதிர்போந்து மன்று வெங்கள் குதிரையேற் றஞ் சிறிது காண்டியென்றார்" (திருவிளை. நரிபரி. எசு.) என்பது, தழுவிவந்திருத்தல் காண்க.

சரு. வீரசி - குதிரை, விசேடம்.

சஅ. மின் - தடாதகைப்பிராட்டியார்.

சகூ. சுபதக்ரமம் - சுபத்தைக்கொடுக்கிறநடை. அறுமனியா - ஒலித்து. மறை அயம் - வேதமாகியகுதிரை.

ரு0. மருத்தை - காற்றை.

ருக. கஞ்சம் - வெண்கலம்.

ருஉ. பரதச்சவுதம் - பரதநூல். பருமம் - குதிரைமுதுகிற்றவிசு.

ருச. வெய்யோன் படியும் மால் வரை - அத்தமயகிரி.

ருரு. மண்டலம் - வட்டம். வீதி - நேரோடல்.

ருசு. இடபமால் - இடபவடிவங் கொண்ட திருமால். ஏன்று - எக்காலத்து.

ருஎ. கடல் திடராயிற்று.

ருகூ. பல்கால் தலைவர் யாரென்ன.

சுக. கொக்கு - குதிரை.

சுஉ. குதிரைச்செட்டி கூறுவான். கற்கிகள் - குதிரைகள்.

சுங. பெருந்துறை - பெரியகடற்றுறை, ஒரு திருப்பதி. உலூகம் - கோட்டான். குதிரை, வேதமுதலிய எழிடத்துற் பிறந்தன என்பதை, "வெடிவாற் பைங்கட் குறுநரி யினத்தினை, யேழிடந் தோன்றி யின்னூற் கியைந்து, வீதி போகிய வாலுளைப் புரவி, யாக்கிய விஞ்சைப் பிறைமுடி யந்தணன்" (கல். அ) எனவும், "மிக்க செழு மறைநாவிற் கமல நாதன் விழிப்புனலில் விண்ணோர்க ளெனுமா

தம்பான், மைக்கடன்மே லமிர்தத்தி லங்கி மீதின் மல்குகருப் பையிலுலுக வண்டத் தன்னிற், றொக்கவெழு பேதமெனு மிவற்றிற் றோன்றுந் தொன் னிம்பவா யீரிரண்டு துணைத்தா னெ ற்றி, யொக்கவெளுக் கும்பரிக ளுள வாய் வானி லொண்புனலிற் செல்லு நெறி யுளவுமாகி." (திருவாத. குதி ரை. சுப) எனவும் வருவனவற்றாலு ணர்க. மொத்தம் - தேர்குதிர், "பரி க்குமிப் பரிமா மொத்தம்." என்பர் பின்னும்; எஉ.

௬௪. வாயதம் - காக்கை. வெருகு- பூனை. ஏனம் - பன்றி. நாய்முதலிய வற்றின் இயல்பையுடைய குதிரை கள் பொல்லா; மயூரமுதலியவற்றின் இயல்பையுடைய குதிரைகள் நல் லன. திருவாதவூரர்புராணம், குதி ரையிட்டசருக்கம், ௩௬, ௩௭ - ம் பா டல்களைப்பார்க்க.

௬௬. ௸புராணம், ௸சருக்கம், ௩௭ - ம் பாடலைப்பார்க்க.

௬௭. வாலதி - வால். மேட்டிரம்- ஆண்குறி. ௸புராணம், ௸சருக் கம், ௩௬ - ம் பாடலைப்பார்க்க.

௬௯. ௸புராணம், ௸சருக்கம், ௪௧ - ம் பாடலைப்பார்க்க.

௭௦. ௸புராணம், ௸ சருக்கம், ௩௪, ௩௫ - ம் பாடல்களைப்பார்க்க.

௭௧. மற்றும் தீங்கு இலை - வேறும் உள்ளனவாகிய தீங்குகள் இல்லை.

௭௨. கிறிவெங்கால - நடையைவி ரும்புகின்ற கால்களையுடையன. கந் துகம் - பந்து.

௭௩. 'சம்புவாலை' என்பது சிலே டை.

௭௪. இந்தக் குதிரைகளின் விலை கள் கூறப் பெற்றுள்ளன.

௭௫ - ௭௬. இவற்றாற் குதிரையின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன.

௭௭. ஆடலாலேதான் தாமதமா யிற்று.'ஓர்பொழுதும்இல்லாது' என் பது சிலேடை.

௮௦. நின்மை - தீமை; ஒருவனை யறிய நன்மை தின்மை; "அடியவர் நன்மை தின்மை யறிபவன்." என் பர் : (௩௫) ௧௧; "தின்மையும் பாவ முஞ் சிதைந்து தேயுமே." (கம்ப. பயன், ௨.)

௮௧. 'சித்திரமா' என்பது சிலே டை.

௮௩. இராவுத்தராயன் - குதிரைச் சேவகன்; இராவுத்தனென்பது, இ ராஜபுத்திரனென்னும் வடமொழிச் சிதைவென்பர்; ௮௯: "இனிமைகூர் ந்திராவுத்தற்கு."; "கலாபத்தனிமயி லேறு மிராவுத்தனே." என்பது கந்த ரலங்காரம், ௯௦.

௮௪. நாறு - நாற்று. இச்செய் யுள், "நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும், விரதங் கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்" (திருநா. தே. திருவாரூர்) என்பதன் கருத்தைத் தழுவி வந்துள்ளது.

௮௫. செண்டு - ஓராயுதம்; கோ ம்பு - அதன் முன்பாகம்.

௮௮. தூங்கலில்லாமல் - தாமதியா மல்.

௯௦. திருமேனிக்கிடு-கவசம். கை வாளம் - கைக்கத்தி; "கரவாளம்" என்றார் முன்னும்; ௩௪. அடிவடிம்பு- அடியின்விளிம்பு.

௯௧. ஆசையுடையன், சிலேடை.

௯௩. உழை - வீடு. செவ்வந்தி மாலை, சிலேடை.

௨௫ - ம் திருவிளையாடல்.

௧. கட்டுண்டேம். தொத்துவர் - தொத்திக்கொள்வார்.

௨. முகமுகம்பார்த்து - ஒன்றன் முகத்தை ஒன்றுபார்த்து; (௪௩)௨௧. கயிற்றைமென்று. அங்கணம் - சல தாரை. சன்னிடல் - நரியின் ஒலிக் குறிப்பு.

௩. தொண்டைவிடுவன-கூவுவன. உள்ள - உள்ளன.

௫. யாணர் மாக்கள் - புதியனவா ய்வந்த குதிரைகள்.

௬. மட்டித்து - கலந்து. இதலிய - இனிய. மொக்கணி - குதிரைக்குக்

கொள்ளுமுதலிய உணவு கட்டும்பை; "மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி, சொக்க தாகக் காட்டிய தொன்மையும்." (திருவா. கீர்த்தி. ௩௩-௩௪.)

எ. மறி - ஆடு. சூகரம் - பன்றி.

அ. 'மின்னுமலிடிக்குமா,' என்பது ஒருபழமொழி.

௯. வரர் - சிறந்தவர்; தலைவர். அர - அரனே; இஃது இரக்கப்பொருளினும்வரும்.

௧௨. 'நல்ல கல்யாணனன்றோ' என்று இகழ்ந்தான், (௨எ) அடி: "என்னையின்றோர் கலியாண னாகக் காண்மின்" என்றதை உட்கொண்டு.

௧௪. கொணர்ந்த மா - குதிரை.

௧௫. சிவை - நரி. மந்துரை - குதிரைச்சாலை. இந்திரஞாலம் - இந்திரசாலம்; "இந்திர ஞாலங் காட்டிய வியல்பும்." (திருவா. கீர்த்தி. ௪௩.)

௧௭. வாசிவாரியப் பெருமான் - குதிரைச் சேவகர்களின் தலைவன்; வாசிவாரியர் - குதிரையைத்தடுத்துச் செலுத்துவோர். திண்ணிமை - வன்மை; தைரியம்.

௧அ. ஆரணமோதிற்று - நீ வேதமோதியது. கோரம் - கொடுமை. சிறையறை - சிறைச்சாலை.

௬௦ - ம் திருவிளையாடல்.

௧. அறையகத்து - அறையில். 'இரும்புதருமனத்தேனை' என்பது திருவாசகத்தில், திருவேசறவின், முதற் குறிப்பு.

௨. 'பொய்யாவையைமாநதி' என்பது, "வையை யென்னும் பொய்யாக் குலக்கொடி" (சில். புறஞ்சேரி. ௧௭௦.) என்பதைத்தழுவியது. முதுமாமங்கை - செம்மனச்செல்வி. முகில் நாயகன் - வருணன்.

௪. கால் கட்ட - வாய்க்கால்களின் தலைப்பிற்படலிட, பயம் - நீர், அச்சம்.

௫. வெள்ளமிகுத்தவிடத்துப்பறையறைவித்தல் மரபு. கம்மை - ஒலி. மனங் கன்றி. என்னுமோ.

௬. கோல் - அளக்குங்கோல்; அறை - வரையறைசெய்த கோட்டம்; கோலால் அறுதிசெய்த இடமுமாம்; "குரம்புகொண் டடைப்பன் யானே கோலஞ்ற முழுது மென்ன." (திருவாத. மண்சுமந்த. ௩௩.)

அ. விதிரா - நடுங்கி.

௯. நாதமாகிய பறை; 'நாதப்பறையன்' என்பது, "நாதப்பறையினர்" (திருவா. அன்னை. ௧.) என்பதைத்தழுவியது. இச்செய்யுளிற், சிலசாதிப்பெயர்கள் தொனித்தல்காண்க; நஞ்சுண்டோனென்பது, கள்ளர்வகையில், ஒன்றன்பெயர். பிட்டு உதிர் - உதிர்ந்தபிட்டு. கொடுக்கு - தொங்கல்.

௧௧. அம்மே - அம்மையே. சொற்றாள் - மண்வேலைசெய்பவன்; "மண்ணகழ்ந் தெடுத்து வருபுனல் வையைக், கூலஞ் சுமக்கச் சொற்றாளாகி." (கல். ௪௧.); சொற்று - மண்வேலை யென்பதை, ௨௩: "சொற்றுளவிவரீ லீங்கோர் கூடைமண் சுமந்தாரில்லை." என்பதனாலுமுணர்க.

௧௪. அந்தித்திருக்கும்பொருள் - முடித்துவைத்திருக்கும்பொருள். கந்தித்து - மணம்வீசி. உண்டு-உள்ளது.

௧௫. வட்டமுறுபிட்டு - வட்டவடிவமாகக் கிண்ணத்தாற்கொட்டி அமைத்துவைத்திருக்கும் பிட்டு; ௧அ: "கனவிய வட்டப் பிட்டுக் கைக்கொடு பிட்டுப் பிட்டு.". அம்ம, விளி.

௧௬. உழப்பாது சுமந்திடும்.

௧௯. அம்மை, விளி.

௨௦. என்ன - என்றுசொல்ல. உதிரை - பிட்டு. 'வித்துநெற்பிட்டு' என்றபாடத்திற்கு விதைநெல்லரிசியாலாக்கிய பிட்டென்று பொருள்கொள்க.

௨௨. கோலறையை. நல்லாள் - நன்மையையுடைய ஆட்களே. வாங்குதல் - கொள்ளுதல்.

௨௫. குழம்புதல் - கலங்குதல். கொட்டு அணைத்து - மண்வெட்டியைத்தழுவிக்கொண்டு. இடை - இடத்தல்; ஒப்புமாம்.

உஎ. வடிவன் நீ - அழகுடையவனாகிய நீ; உஅ: "மெல்லியவடிவனீ". கறுத்த - கோபித்த; தொகுத்தல்.
உஅ. நயந்து அவரோகிம்.
உகூ. 'பந்து-வந்து; திசைச்சொல்; இது, 'வைத்து' என்பதுபோலப்பொருளின்றிப்பயிலுவதொருசொல்.
௩o. பகுந்து - பங்கிட்டு.
௩க. சதமுறை - பலமுறை. அதர்பட - வழிபட.
௩உ. நீரக்குறை - கனியின்குறையை. கவ்வை - துன்பம்; ஒலியுமாம். தவ்வுதல் - தாவுதல்.
௩அ. கங்கைக்கரையுயர்மண் - திருமுடியில் வைத்திருந்தமண்.
௩கூ. திருவருளுக்கு உண்டோ - திருவருளுக்கு எல்லையுண்டோ.
சக. பிட்டுவாணிச்சிக்கு.
சஉ. புடைப்பு - அடியாலுண்டாகிய வீக்கம்.
சச. இவன்மூகத்தால் - இவன்வழியால். விடுவித்தற்கு - சிறையினின்றும் நீக்குதற்கு. தன்வழிதிரிதற்கு இவனை விடுவிடு.
சரு. மதுரைத்தெருவிற் பரியேறும். கொந்தகன் - படைத்தலைவன்.
சஅ. 'நமச்சிவாயவாழ்க' என்பது, திருவாசகத்திற் சிவபுராண அகவலின் முதற்குறிப்பு.
சகூ. ஞாயசூத்திரர் - சற்சூத்திரர்.
ருo. அன்னு, நெஞ்சறிகட்டு. மா-அழகு. என்ன-என்று திருவாதவூரர் துதிக்க.
ருக. சித்திரக்கோவை - திருச்சிற்றம்பலக்கோவையார்.
ருஉ. மன்னன்-பாண்டியன்; எழுவாய். அம்மை - செம்மனச்செல்வி.
ரு௩. மேய்ந்து - வேய்ந்து. எறும் ஆனும்.
ருச. உயர்துறக்கம் - சிவலோகம்.
ருரு. பறைதல் - சொல்லுதல். இறைவன் - சிவபெருமான்.
ருகூ. அவதானங்கள்-திருவிளையாடல்கள்.

## ௬க-ம் திருவிளையாடல்.

க. பெருங்கிராமம் - ஐந்நூறுகுடிகள் நிறைந்தவூர்; (சூடா. இடப்பெயர். ௩க.).
உ. பாகவதப்பிரமசாரி-வைணவப்பிரமசாரி. புக்கில் - வீடு. உதகம்செய்ய - தாரைவார்க்க.
௩. மனம்குன்ற. கன்னி - எட்டுப்பிராயமுடையவள்; "அகவை யிருநான்குடையாள் கன்னி" மாயூரப்புராணம்.). இடுகுறி-இடப்படும் நெற்றிக்குறி.
ச. வேதசூத்திரம் - வேதசம்பந்தமான சூத்திரங்கள்.
கூ. சாறு-கலியாணம். நெறிதப்பாவாறு உதகம் அளித்து; உதகம் - தாரை. இனியபல - ஸ்திரீதனம். பந்தம் - உறவு, முறை.
கo. தனு - வில், உடம்பு. மரல் அனை - மரல்நாரையொத்த.
கக. படை, வேல்.
கஉ. அமுதுபடி - அரிசி. மேல் அமுதுசெய்யுமாறு ஓதமென்ன.
கஎ. பட்டு அணை-பட்டாலாகிய அணை. நோக்கு - கண்ணில். அன்னையில் புதல்வன் - தாயில்லாதபிள்ளை; பிறப்பில்லாதவர்.
ககூ. திருவினன் - லக்ஷ்மி. வளர்த்தியைத்து - தூங்கச்செய்துவைத்து.

## ௬உ-ம் திருவிளையாடல்.

உ. அந்து - பாதநூல்.
௩. மிக்கசிரத்து, பாண்டியனுடையது. வளவன்கேட்டு. இகலி - மாறுபட்டு; உஅ: "இகல்விட்டு" என்பதனுல், சோழன் இப்பொழுது மாறுபட்டிருந்தமை வலியுறும்.
ரு. உளம்பட - மனமெலிய.
எ. விளிவு - அவமானம்.
அ. விருது - என்னொடெதிர்ப்பவரில்லையென்பது. புயங்கநட்டம் - ஒருவகைநடனம். வாமத்தாள் - இடத்தாள்.
கூ. சென்னிசெற்றத்தால் - சோழன்சீற்றமான கோபத்தால்.

௧0. நின்றல்-நிற்றல்; மெலித்தல். கெட்டேன், ஐயோ.
௧௩. ஈசானகோணம் - வடகீழ்மூலை. அதிரவீசி ஆடிஞன் என்க; "அதிர வீசி யாடுவாய்" (திருஞா.தே).
௧௪. பணை - வாத்தியம்; உடுக்கை, "மாறியாடக்கொடியிட்ட பெருமான்" என்பர்பின்னும்; உ௫.
௧எ. பண்டு அருங்கூத்து - முன்பில்லாதகூத்து; பண்தரும் - இசையைத்தருகின்றவென்றுமாம்.
௧௯. வடிவுறுதிருக்கூத்து - சொக்கத்தாண்டவம்.
உ0. முன், "தென்மதுரைமாநகர்சேர்திருச்சிற்றம்பலம்போற்றி" என்றார்; (௧ட) ௧௪. புரிவலித்து - கயிறு கட்டி.
உ௧. மாணிக்கத்தாள் - மாணிக்கக் காம்பு.
உஉ. இயற்பெருமான் - சொக்கநாயகர்; இயல் - அழகு.

௫௫ - ம் திருவிளையாடல்.

௧. ஆதவன் - சூரியன். வடதரு - ஆலமரம்.
உ. எய்து - எய்தலால். தொங்கிஞான்ற - தொங்கிய; ஒருபொருட்பன்மொழி. பகழி - அம்பு.
௪. பறையும் அது - சொல்லிய அச்சொல். போது - வா.
௫. உடல்நடுங்கி.
எ. ஏதம் ஒழி-துன்பம் ஒழிவாயாக. இங்கு எய்து-இங்கேவா. தருந்தகனம் - துன்மரணமாக இறந்தவர்க்குச் செய்தற்குத்தக்க தகனம்.
௯. 'அஞ்சினவீசன்', என்பது, சொக்கநாயகர் பழிக்கு அஞ்சியதைப் புலப்படுத்தியது.
௧0. விள்ளான் - சொல்லாகு.
௧௧. படர் - யமதூதர். விரை - மலர் சந்தனம் முதலிய நறுமணம்.
௧௪. வற்றுன - வன்மையையுடையதான. ஆர்த்த தும்பு-கட்டியகயிறு.
௧௫. அயம்=ஐயம் - ஸந்தேகம்.
௧௬. உயர்ந்ததூதன் - இருந்தவருகிய பெரியதூதன். கூறும்கூறுவான்.
௧அ. சுகத்தை-இனியை. கோல் - அம்பு. எய்ததை, உ - ம் செய்யுளாலும் உணர்க.
௧௯. பெரியதந்தை, எழுவாய். அசன் - அசமகாராசர்; இரகுமகாராசருடைய புத்திரர்; தசரதருடைய தந்தை. வடிவமங்கை - இந்துமதி.
உ0. இந்துமதி-அசமகாராசர் மனைவி; நாரதமுனிவர் வீணையிற்புனைந்திருந்த பூமாலை காற்ருல்வீழப்பெற்றே இந்துமதி இறந்தனளென்பது, இரகுவம்சம், அ-ம் சருக்கத்திற் கூறப்பெற்றுள்ள கதை. இதனைத் தமிழ் இரகுவங்கிசம், இந்துமதி பிறப்பு நீங்குபடலம், ௪உ-ம்செய்யுள் முதலியவற்ருலும், "நன்ஞண் மதியக் குடையோன் குலோத்துங்க ஞகைவெற்பிற், பொன்ஞ ளயோத்தியி லுண்டாய பாவம் புனத்துமுண்டோ, வந்நாளும் பெண்பழி கொண்டது மாலையென் ருருஞ்சொல்வா, ரிந்நாளும் பெண்பழி கொள்ளவிம் மாலை யெதிர்ப்பட்டதே" (குலோத்துங்கசோழன்கோவை, ௧எ௫.) என்னும் செய்யுளாலுமுணர்க. தேனுவால்-பசுவினுல்.
உஉ. மருப்பு இல் சே-கொம்பில்லாதபசு.
உ௩. முளைத்தளை - முளையிற்கட்டியகட்டு.
உ௪. நாம் - அச்சம்.
உ௫. யாமினியில் - இரவில்.
உஎ. யாவையும் அழித்து ஆக்கவல்லான்-எல்லாப்பொருள்களையும் சங்கரித்துச் சிருட்டித்தருள வல்லமையுடையவர்.
உ௯. சோமசுந்தரக்கடவுள் பழிக்கஞ்சியதை, ௯: "தென்றமிழ்நாடு" என்னும் செய்யுளாலும் உணர்க.

௫௪ - ம் திருவிளையாடல்.

௧. அவமானவஞ்சம் - அவமானத்தைத்தரும் வஞ்சனைத்தொழில்; "அவமான வஞ்சம் பிறர்க்குரை யார்கணல்லோர்' என்பர்பின்னும் (௫௫) ௪0.
உ. கொட்டு - மண்வெட்டி.

